# ஷைகுல் இஸ்லாம் இப்னு தைய்மிய்யா (ரஹ்) அவர்கள் பரலேவிய உலமாக்கள் மற்றும் பரலேவியர்கள் அங்கீகரிக்கும் உலமாக்களின் பார்வையிலே

பரலேவிகள், ஷைகுல் இஸ்லாம் இப்னு தைய்மிய்யா ( ரஹ்) அவர்களை வழிகேடன் என்பதாகவும், இறைநிராகரிப்பாளன் என்பதாகவும் வரம்பு கடந்து விமர்சிக்கின்றனர்.

ஆனால் பரலேவிகளின் ஆரம்ப கால பெரியோர்கள் இப்னு தைய்மிய்யா ( ரஹ்) அவர்களை ஷைக் என்றும், இமாம் என்றும், கல்விக்கடல் என்பதாகவும் அங்கீகரித்துள்ளனர்.

பரலேவிய அறிஞர் கூறுகிறார்: இமாம் இப்னு தைய்மிய்யா ( ரஹ்) மற்றும் அவரைச் சார்ந்தவர்களுடன் கருத்து வேறுபாடு இருந்த போதும் எனது தாதா அ்்லா பீர் முஹ்ர் அலி ஷாஹ்

(ரஹ்) அவர்கள் அன்னாருக்காக ( இப்னு தைய்மிய்யா) அல்லாஹ் அவரை மன்னிப்பானாக! ' 'என துஆ செய்தார்கள். அன்னாரின் பெயருடன் ஷைகு என்பதை இணைத்துதான் எழுதுவார்கள்.(284 لطمة الغيب ص)

பரலேவிய அறிஞர் பீர் நஸீம் கூறுகிறார்: அக்காலத்தின் பெரும் மார்க்க மேதையைப் போன்றவர்தான் இப்னு தைய்மிய்யா (ரஹ்) ( راه رسم منزل با ص )

பீர் மெஹர் அலி ஷாஹ் ( ரஹ்) பரலேவி குறிப்பிடுகிறார்:

இப்னு தைய்மிய்யா (ரஹ்) மற்றும் அவர்களின் மாணவர்கள்

கல்விக்கடல், இஸ்லாமிய சேவகர் என்பதில் எந்த ஒரு விமர்சனமும் இல்லை.( مہر ) منیر باب

பரலேவிகளால் போற்றப்படும் அறிஞர் உமர் பரலேவி அவர்கள், இமாம் இப்னு தைய்மிய்யா (ரஹ்) எழுதியுள்ளார்கள்: இப்னு தைய்மிய்யா (ரஹ்) சுன்னாவின் தலைவர்

அப்துல் ஹகீம் ஷரஃப் காதிரி பரலேவி تذکرہ اکابر اہلسنت என்ற நூலில்

உமர் பரலேவி அவர்களை நல்ல அறிஞர் என்பதாக அங்கீகரித்துள்ளார்கள் இப்னு ஆபிதீன் ஷாமி ( ரஹ்) அவர்கள், இப்னு தைய்மிய்யா ( ரஹ்) அவர்களை " ஷைகுல் இஸ்லாம்" என்பதாக புகழாரம் சூட்டியுள்ளார்கள் (رد المحتار )

இப்னு ஆபீதின் ஷாமி ( ரஹ்) அவர்களைப் பற்றி பரலேவிய தலைவர் கூறுகிறார்கள்: அஹ்மத் ரிளாகான்

உறுதி மிக்க ஆய்வாளர்களில் முத்திரையாக திகழ்ந்தார்கள். (فتاوی رضویہ)

நல்ல அறிஞர் என்றும், தலைவர் என்றும் இப்னு ஆபிதீன் ஷாமி ரஹ் அவர்களை அஹ்மத் ரிளாகான் பரலேவி குறிப்பிட்டுள்ளார் (فتاوی رضویہ)

அல்லாமா சூயூத்தி ( ரஹ்) அவர்கள் பரலேவிகளால் போற்றப்படும் மிகப் பெரும் மார்க்க மேதை

இவர் ( ஸுயூத்தி ரஹ்) அவர்கள், இப்னு தைய்மிய்யா ( ரஹ்) அவர்களைப் பற்றி கூறுவதைப் பாருங்கள் ابن تيمية الشيخ الامام العلامة الحافظ الناقد الفقيه المجتهد المفسر البارع شيخ الاسلام இப்னு தைய்மிய்யா அவர்கள்

மூத்த அறிஞர் , இமாம் பெரும் மேதை, ஹாபிள் ஆய்வுத்திறன் உடையவர் பகீஹ், முஜ்தஹித் எனும் ஆய்வாளர் தேர்ச்சி மிக்க விரிவுரையாளர் இஸ்லாத்தின் பெரியோர் (طبقات الحفاظ)

இமாம் இப்னு தைய்மிய்யா ரஹ் அவர்களை புகழ்ந்த ஸுயூத்தி ( ரஹ்) அவர்களைப் பற்றி ரிளாகான் பரலேவி கூறுகிறார்: ஹதீஸ் கலையில் கரைகண்ட ஹாபிள், முத்திரையானவர் இமாம், கண்ணியமானவர் மார்க்கத்தின் தீனின் சங்கையானவர் ஸுயூத்தி ரஹ் அவர்கள் ( فتاوه رضويه) இமாம் இப்னு தைய்மிய்யா ரஹ் அவர்கள் மற்றும் இப்னு கையிம் ரஹ் அவர்கள் இருவரும் அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஅத்தின் பெரியோர்களில் உள்ளவர்கள் இந்த

ஜமாஅத்தின் நல்லோர்களில் உள்ளவர்கள் என முல்லா அலி காரி ரஹ் அவர்கள் புகழ்ந்துள்ளார்கள்.(جمع الوسائل فی شرح الشمائل )

ஹனீஃப் குரைஷி பரலேவி அவர்கள், முல்லா அலி காரி ரஹ் அவர்களை பிரபல்யமான முஹத்திஸ் என குறிப்பிட்டுள்ளார் ( روائد مناظر گستاخ کون )

இமாம் ஸுன்னா இப்னு தைய்மிய்யா ரஹ் என அப்துல் ஹக் முஹத்திஸ் தெஹ்லவி குறிப்பிட்டுள்ளார்கள் (تعارف فقہ و تصوف )

கவாஜா குலாம் பரீத் அவர்கள், இப்னு தைய்மிய்யா ரஹ் அவர்களை அஹ்லே ஹதீஸினரின் இமாம் இமாம் ஹள்ரத் இமாம் இப்னு தைய்மிய்யா என புகழ்ந்துள்ளார்கள் (مقابیس المجالس)

கவாஜா குலாம் ஃ பரீத் பரலேவிய அறிஞர்களில் உள்ளவர் என்பதானது பரலேவிகளின் அங்கீகாரம் பெற்ற நூலான تذکرہ اکابر اہل سنت வில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆக

இதன் மூலம் இப்னு தைய்மிய்யா ( ரஹ்) அவர்கள் அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஅத்தின் தனித்து விளங்கும் அறிஞர் பெரும் மார்க்க மேதை அது மட்டுமின்றி முல்லா அலி காரி ஹனஃபி ரஹ் அவர்களின் கண்ணோட்டத்தில் அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஅத்தின் நல்லோர்களில் உள்ளவர்.எனினும் இன்றைய அறியாமை நிறைந்த பரலேவிகள் உண்மை நிலையை அறியாமல் இமாம் இப்னு தைய்மிய்யா ரஹ் அவர்களை விர்சிப்பதானது உண்மைக்கு எதிரானதும்,அபாண்டமும் பொய்யுமாகும்.

முக்கிய குறிப்பு:இமாம் இப்னு தைய்மிய்யா (ரஹ்) அவர்கள் பெரும் மார்க்க அறிஞராக இருந்த போதிலும் சில சட்டங்களில் பெரும்பான்மை

அறிஞர்களுக்கு மாற்றமாக தீர்ப்பளித்துள்ளார்கள் என்பதையும் நினைவில் கொள்ள கடமைப்பட்டு இருக்கிறோம்.